SRI M. C. MUTHUKUMARASWAMY: அனேக கிராமங்கள் வழியாக பஸ்கள் ஓடிக்கொண்டிருப்பதால் ரயிலில் பிரயாணம் செய்வது குறைந்து, ரயில் வருமானமும் குறைந்து நஷ்டம் ஏற்படுகிறது என்ற புகார் இருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? புதிய ரயில் பாதைகளைத் திறப்பதன் காரணமாக அதனால் ரயில்வேயிக்கு நஷ்டம் ஏற்படும் அல்லவா? அதற்கு அரசாங்கம் என்ன பதில் சொல்லியிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் அங்கத்தினருடைய இந்தக் கருத்தை யாரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். நல்ல ரோடும் வேண்டும்; நல்ல பஸ் போக்குவரத்தும் வேண்டும். ரயில் பாதை வேண்டாமென்று யாரும் சொல்லமாட்டார்கள்.

MR. SPEAKER: Next question.

Some hon. Members rose . . . . .

MR. SPEAKER: How can I allow further supplementaries? I have already allowed ten supplementary questions on the question.

SRI S. M. ANNAMALAI: One question, Sir.

MR. SPEAKER: No, I am sorry.

*Tirunelveli-Cape Comorin Railway line*

*795 Q.—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Home be pleased to state the steps taken to include the opening of a new railway line from Tirunelveli to Cape Comorin (via) Nagercoil, in the Third Five-Year Plan?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The Tirunelveli-Cape Comorin line has been included as item 4 in the list of seven lines suggested to the Railway Administration for inclusion in the Third Five-Year Plan.

SRI A. A. RASHEED: Is the Hon. Minister aware that no mention has been made about this line by the Railway Ministry and if so, may I know whether any protest has been made to the Railway Ministry against their failure to include this line?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, there is no question of making any protest. We have recommended these lines. It is for the Railway Ministry to consider them and take up those lines. That would depend on the funds that are available with them for the purpose.

SRI A. A. RASHEED: May I know which seven lines have been recommended by the Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Six lines have been recommended. The first line is Salem-Bangalore. I am sure hon. Member Sri Thiagarajan will be pleased to hear that we have given second priority to the Theni-Gudalur line. The third line recommended by us is Manamadurai-Virudhunagar (via) Aruppukkottai. The fourth line is Chinnasalem-Chingleput. After consultation with Railway Administration, I have suggested the fifth line, Salem-Karur. This is a new line recommended by us as we thought that it was necessary. Sir, the sixth line is Tirunelveli-Cape Comorin. As the seventh item we have recommended the electrification of the broad gauge line up to Arkonam.

22nd April 1960]

SRI K. ANBAZHAGAN: அமைச்சர் அவர்கள் தெரிவிக்கின்ற இந்தப் புதிய வழிகளில் எவையாக இருந்தாலும், அவை ஏற்றுக்கொள்ளப்படும் என்ற உறுதியைப் பெற வாய்ப்பு இல்லாத காரணத்தால், மத்திய அரசாங்கம் ரயில்வேத் துறைக்காக எவ்வளவு செலவழிக்கிறார்களோ, அதிலே சென்னை மாநிலத்திற்கு உரிய பங்கு இவ்வளவு என்று கேட்க முடியுமா? அல்லது, தென் மண்டலத்திற்கு இவ்வளவு பங்குத் தொகை ஒதுக்க வேண்டுமென்று கேட்க சென்னை அரசாங்கம் தென் மண்டலத்தின் சார்பாக அவர்களிடத்தில் இணைந்து கேட்க முடியமா? உரிய பங்கைப் பெறுக வரையில், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் ஒரு வேளை முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் அனுபவம்தான் கிடைக்கும் என்பதை சென்னை அரசாங்கம் கருதவில்லையா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இப்படியெல்லாம் பங்கு கேட்பது சரியல்ல. அது நமக்குக் கூட நலன் அளிக்கக் கூடியது அல்ல என்று தான் நான் கருதுகிறேன்.

SRI T. S. RAMASWAMI: திருநெல்வேலி–கன்யாகுமரி லைன் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே சேர்க்கப்பட்டிருந்தது என்றும், அதன் பின்னர், சிக்கனம் காரணமாக "ப்ரூன்" செய்யும் போது விடப்பட்டது என்றும் சொல்லுகிறார்கள். கன்யாகுமரி–திருநெல்வேலி லைன் மிக முக்கியமானது. ஏனென்றால், கன்யாகுமரிக்கு ஏராளமான யாத்ரீகர்கள் செல்கிறார்கள். ஆகவே, அதற்கு முதல் பிரையாரிடி கொடுப்பதற்கு அரசாங்கம் வழிவகை செய்யுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் அங்கத்தினர் அவர்களுக்கு இது முதல் பிரையாரிடி கொடுக்கக்கூடியதாகத் தெரியலாம். இருந்தாலும். பொதுவாக ராஜ்ய நிலைமையை எடுத்துக்கொண்டு பார்த்துத் தான் அரசாங்கம் வரிசைக் கிரமத்தை நிர்ணயம் செய்திருக்கிறார்கள்.

SRI A. A. RASHEED: What is the reply received by the Government from the Railway Ministry regarding the recommendation about these 6 or 7 lines?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: That has yet to be decided. But, the Railway Ministry points out, that they had asked for a larger allotment, but their proposal was reduced to about 1,200 miles of new railway lines. These 1,200 miles have to be fixed according to the urgent needs of areas concerned.

SRI S. NAGARAJA MONIGAR: மத்திய அரசாங்கமோ அல்லது ரயில்வே நிர்வாகமோ தற்போது அனுசரிக்கும் கொள்கைப்படி தமக்குப் போதுமான ரயில் பாதைகள் கிடைக்கின்றன என்ற அபிப்பிராயம் மக்களுக்குச் சரிவர இல்லை என்பதைச் சர்க்கார் உணருகிறார்களா? மேற்கொண்டு ரயில்பாதைகள் நமக்குக் கிடைப்பதற்கு நமது சர்க்கார் வேறு என்ன முயற்சி செய்கின்றார்கள்? அல்லது, இப்பொழுது நடப்பதே சரி என்று கருதுகிறார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அவரவர் தேவைகளை அவரவர்கள் வற்புறுத்திக்கொண்டிருப்பார்கள். ஆனால், மொத்தமாக இதை எப்படி உருவாக்கிச் செய்வது என்பது மத்திய அரசாங்கம் கவனிக்க வேண்டியது. ஆனால், இந்த ராஜ்யத்தைப் பொறுத்த மட்டில், சில புதிய லைன்கள் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று பலமாகத் தான் வற்புறுத்திக்கொண்டு வருகிறோம்.

SRI T. T. DANIEL: Sir, may I know whether the preliminary survey for the extension of these lines from Tirunelveli to Cape has been completed and if so, what the total cost for this extension is?

[22nd April 1960

May I also know whether the Government will take into consideration the fact that Kanyakumari is the only district in the State where there is no railway line at all and so give high priority to that line?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, for some of these lines, survey has been made. Sometimes, re-survey is necessary. But, I have no information about the cost of survey that has been made. It is true that in the Kanyakumari district there are no railway lines, but that will not be the only consideration for giving certain priorities for that proposal.

SRI M. K. SOMASUNDARAM : திருநெல்வேலி–கன்யாகுமரி ரயில்வே லைன் போடுவதற்கு பஸ் சொந்தக்காரர்களின் எதிர்ப்பு இருப்பதால், அதற்கு முதலிடம் கொடுக்கப்படவில்லை என்பது உண்மையா? அப்படியானால், பொது மக்களுடைய வசதியை உத்தேசித்து, அதற்கு முதலிடம் கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : திருநெல்வேலியிலிருந்து கன்யாகுமரி வரைக்கும் நல்ல ரோடு இருக்கிறது. சர்க்கார் நடத்தும் பஸ்-ஸர்வீசும் இருக்கிறது. அது ஒரு காரணம் தான். இருந்தாலும் காசியிலிருந்து கன்யாகுமரி வரைக்கும் நாஷனல் ஹைவேயைப் போல, ரயில்வேயைப் பொறுத்தும், தூரத்திலிருந்து வருகிறவர்கள் ஏதோ திருநெல்வேலியில் இறங்கி பஸ்ஸிலே கன்யாகுமரி போகவேண்டிய நிமித்தம் இருப்பதால், அதற்கு ஹையஸ்ட் ப்ரையாரிடி கொடுக்கவேண்டும் என்பதற்காக முயற்சி செய்கிறோம்.

SRI A. GOVINDASAMY : தொழில் வளர்ந்திருக்கும் பகுதிகளில் புதிதாக ரயில் பாதைகள் போடப்படும் என்ற கருத்தை மத்திய அரசாங்கம் தெரிவித்திருக்கிறார்கள். இருந்தும், தொழில்கள் வளரக்கூடிய பகுதிகளில் ரயில் பாதைகளைப் போடாமல் காலதாமதப் படுத்துவதற்குக் காரணம் என்ன ? அதை நமது அரசாங்கம் மத்திய அரசாங்கத்திடம் வலியுறுத்தி, குறிப்பிட்ட ஏழு வேலைகளையாவது துரிதமாக எடுத்து நடத்துவதற்கு முயற்சி செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தொழில் வளர்ச்சி அடைகிற இடங்களில் ரயில் பாதைகள் போட்டு அதற்கு வசதி அளிக்கும் முறையில் அமைக்க வேண்டும், முதல் கவனம் செலுத்தப்பட வேண்டும் என்ற கருத்தை நாம் புறக்கணிக்க முடியாது. ஆனால் இங்கும் தொழில் வளர்ச்சி இல்லாமல் இல்லை. மற்ற அவசியமும் இருக்கிறது. இதையெல்லாம் எடுத்துக் காட்டித் தான் நாம் வலியுறுத்திக் கொண்டு வருகிறோம்.

### *Pilgrim tax*

* 796 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) காஞ்சீபுரத்தை ஆண்டு பூராவும் பிரயாணிகள் ஸ்தலமாக்கி பிரயாணிகள் வரி வசூலிக்க அனுமதிக்க வேண்டுமென்று கோரி நகராட்சி மன்றத்தின் தீர்மானம் சர்க்காருக்கு வந்ததா ?

(ஆ) அப்படியானால், இதன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (*a*) Yes, Sir.

(*b*) The matter is under correspondence with the Government of India.